# இந்து ஆலய வழிபாட்டு முறைகள்!






'காவ்யா'

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B T

19 கண்ணதாசன் சாலை
தியாகராயநகர்
சென்னை - 600 017

☐ INDU AALAYA VAZHIPATTU MURAIKAL ☐ Compiled by Kaavya ☐ First Edition : 2002 ☐ Third Edition : 2007 ☐ Published by ANURAGAM 19 Kannadhasan Salai T.Nagar Chennai - 600 017 ☐ Typeset at: Skill Computers, Chennai - 600 018 ☐ Printed at: Creative Offset, Chennai - 600 034.

**Rs. 10.00**

**5784**

இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருந்தாலும், ஆலயத்திற்குச் சென்று இறைவனை வழிபடுவது மனிதனை நல்வழிப்படுத்தும். ஆலய வழிபாட்டு முறைகளையும், ஆலய அமைப்புகளையும் முழுமையாக விளக்கும் அரிய நூல் இது.

- அநுராகம்

# இந்து ஆலய வழிபாட்டு முறைகள்!

## வினா - விடை

**1. ஆலயம், கோயில் - பொருள் விளக்கம் தருக?**

ஆ என்பது ஆன்மாவைக் குறிக்கும். லயம் என்பது கடவுளின் திருவடிகளில் சேருகின்ற இடம் என்பதைக் குறிக்கும்.

கோ + இல் = தலைவன் (இறைவன்) தங்கும் இடம் என்பதைக் குறிக்கும்.

**2. கோயிலுக்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் யாவை?**

தேவக்கிருகம், திருக்கோவில், தேவாகாரம், தேவாய தனம், தேவாலயம், தேவமந்திர், தேவஸ்தானம், அர்ச்சாக்ரஹம், கோட்டம் என்பன.

**3. கோயில் நிர்மாணம் எத்தனை வகைப்படும்?**

1. ஆவர்த்தம் - புதிதாக ஆலயம் நிர்மாணித்து, விக்ரகப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்தல்.

2. அநாவர்த்தம் - ஆற்று வெள்ளம், பூமி அதிர்ச்சி, அதிக மழை, மணல் மூடுதல் முதலியவற்றால் ஆலயம் சேதப்பட்டால் அதை மீண்டும் கட்டி, விக்ரகங்களைப் புதுப்பித்துச் செம்மைப்படுத்துதல்.

3. புநராவர்த்தம் - கால்லப்போக்கில் ஆலயத்திற்குத் தேவைப்படும் திருப்பணிகளைச் செய்து அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம் செய்தல்.

4. அந்தரிதம் - திருட்டு போன்றவை நடந்து ஆலயத் தூய்மை, கெடின் அதைச் சரி செய்யும் பொருட்டுச் சம்ப்ரோக்ஷணம் செய்தல்.

4. ஆலயங்களின் அமைப்பு எத்தனை வகைப்படும்? அவை யாவை?

ஆலயங்களின் அமைப்பு ஏழு வகைப்படும்.

1) கரக்கோயில், 2) ஞாழக்கோயில், 3) கொகுடிக் கோயில், 4) இளங்கோயில், 5) மணிக்கோயில், 6) ஆலக் கோயில், 7) தூங்கானை மடம்.

5. கோபுரத்தின் தத்துவம் என்ன?

ஸ்தூல லிங்கம் என்று கோபுரத்தைக் கூறுவர். அனைவரும் வழிபடும் வகையில் வெளிப்படையாக அமைந்த இறைவனின் அடையாளம். அதனால்தான் கோபுர தரிசனம் கோடி புண்ணியம் என்று கூறப்படுகிறது.

6. கோயில்களில் கர்ப்பக் கிருகம் அல்லது கருவறையினுள் இறைவனை அமைத்திருக்கும் தத்துவம் என்ன?

ஆலயங்களில் கர்ப்பக் கிருகம் அநாஹத சக்ரம். ஆலய மையப்பகுதி கருவறை. நம் இதயத்தில் இறைவன் இருப்பதற்குரிய அடையாளமாக இது கருதப்படுகிறது.

7. பிரகாரம் எதைக் குறிக்கிறது?

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆநந்த மயம் என்ற ஐந்து கோசங்களாகி அவற்றைக் கடந்து அப்பாற்பட்ட இறைவனை அடைவதான தத்துவமே பிரதக்ஷிணம் செய்தல். ஏழு பிரகாரங்கள் உள்ள கோயில்களில் ஸ்தூலம், சூட்சுமம் இரண்டும் மற்றுமிரு பிரகாரங்களைக் குறிக்கும்.

8. ஆலய விமானங்கள் எத்தனை வகைப்படும்? விவரி.

ஆலய விமான அமைப்புகள் மூன்று வகைப்படும்.

1. நாகரம்: பீடம் முதல் அனைத்தும் சதுரமாக உள்ள விமானம். (வட இந்திய ஆலயங்களில்)

2. திராவிடம்: கண்டம் முதல் எண்கோணமாக உள்ள விமானம். (தென்னிந்திய ஆலயங்களில்)

3. வேசரம்: கண்டம் முதல் வட்டமாக உள்ள விமானம். (மத்திய இந்திய ஆலயங்களில்)

9. விமானத்தில் எந்த உருவங்கள் எங்கெங்கு அமைக்கப்படும்?

விமானத்தின் கீழ்ப்புறம் முருகன், தென்புறம் தட்சிணா மூர்த்தி, மேற்புறம் விஷ்ணு, வடபுறம் பிரமன் ஆகிய வற்றைச் சுதையால் அமைப்பர். விமானத்தின் மேல் பாகத்தில் இடபத்தையாவது பூதத்தையாவது அமைப்பது மரபு ஆகும்.

10. ஆலய அமைப்பு ஆறு ஆதாரங்களுக்கும் பொருந்துமாற்றைக் கூறுக?

1) கர்ப்பக் கிருகம் - மூலாதாரம்
2) அர்த்த மண்டபம் - சுவாதிஷ்டானம்
3) மகா மண்டபம் - மணிபூரகம்
4) ஸ்தபன மண்டபம் - அனாக்தம்
5) அலங்கார மண்டபம் - விசுத்தி
6) சபா மண்டபம் - ஆக்ஞை

என்பவற்றை உணர்த்துகின்றன.

11. கொடி மரத்தின் முக்கியத்துவம் யாது?

ஆலய அமைப்பில் கொடிமரம் சூட்சம லிங்கம் எனப்படும். அசுரர்களை அகற்றுவதன் பொருட்டும், கணங்களையும் தேவர்களையும் அழைத்தற்பொருட்டும், கோயிலையும், பக்தர்களையும் பாதுகாக்கவும் கொடிமரம் நிறுவப்படுகிறது.

12. திருக்கோயிலில் அமையும் மண்டபங்களின் பெயர்களைக் குறிப்பிடுக?

1) அர்த்த மண்டபம் 2) ஸ்தபன மண்டபம் 3) மகா மண்டபம் 4) நிருத்த மண்டபம் 5) வாத்ய மண்டபம் 6) சோபான மண்டபம் 7) ஆஸ்தான மண்டபம் 8) யாக மண்டபம் 9) புஷ்ப மண்டபம் 10) பூஜா மண்டபம் 11) உத்யான மண்டபம் 12) ஜலக் கிரீடை மண்டபம் 13) சுவர்ண மண்டபம் 14) அபிசேக மண்டபம் 15) அலங்கார மண்டபம் 16) வசந்த மண்டபம் 17) உபசார மண்டபம் 18) பீடா ரோகண மண்டபம் 19) அத்யயன மண்டபம் 20) ஆகம மண்டபம் 21) புராண

மண்டபம் 22) தீக்ஷா மண்டபம் 23) துவஜா ரோகண மண்டபம் 24) விஜய மண்டபம்

மற்றும் யாக சாலை, பாக சாலை, கோசாலை, கஜசாலை, தான்ய ஆலயம், ரத்னாலயம் முதலியன.

13. அர்த்த மண்டபம் எது?

கருவறைக்கு (மூலஸ்தானத்திற்கு) முன்பு வெளியில் உள்ள மண்டபம் அர்த்த மண்டபம் ஆகும்.

14. மகா மண்டபம் யாது?

ஸ்தபன மண்டபத்திற்கும் வெளியே இருப்பது மகா மண்டபமாகும். இங்குதான் உண்டியல் போன்றவை இருக்கும்.

15. கோயிலின் ராஜ கோபுரத்தில் பல்வகை உருவச் சிற்பங்களும் இருப்பது ஏன்?

கோயிலிலுள்ள மற்ற கோபுரங்களைவிட ராஜகோபுரம் உயர்ந்து இருக்கும். ஆலயத்தின் முகப்பிலுள்ள இக் கோபுரம் ஸ்தூல லிங்கம் எனப்படும். தொலைவில் இருப்ப வர்களும் கண்டு வழிபடும்படியாக அமைந்தள்ளது. இக் கோபுரம் 3, 5, 7, 9, 11 என்னும் எண்ணிக்கையில் அமைந்த நிலைகள் உடையதாக அமையும். இக்கோபுரத் தில் பல்வகை வடிவங்களும் சிற்பங்களாக இடம்பெறும். இக்கோபுரம் கண்ணில் பட்டதும் கைகூப்பி வணங்க் வேண்டும்.

16. பலி பீடம் என்பதன் சிறப்பு யாது?

திருக்கோயில் பலிபீடம் என்பது பாசத்தைக் குறிக்கிறது. இதனை ஸ்ரீபலிநாதர் என்பர். ஆலயத்துள் எட்டு மூலைகளில் எட்டு பலி பீடங்கள் அமைந்திருக்கும். இவை எட்டுத் திக்கு பாலர்களைக் குறிக்கின்றன.

இவைகளுக்கெல்லாம் தலைமைப் பீடமாகத் திகழ்வது நந்தியெம்பெருமானின் பின்புறமுள்ள பலி பீடமாகும். பாசங்களைப் பலியிட்டு, உள்ளே சென்று பரமனின் அருள் பெறுகிறோம் என்பது கருத்து. எனவே, இதன் முன்பாக முதலில் நின்று மேற்கூறிய பாவனையைக்

கொண்டு வணங்கிய பின்பே உள்ளே தரிசனத்திற்குச் செல்ல வேண்டும்.

பலிபீடம் இறைவனுடைய மாயச் சக்கரம். நாம் பிறப்பு இறப்பு என்னும் மாயா சக்கரமான பலி பீடத்தில் மும்முறை வணங்குவதும், அதை உட்படுத்தி வலம் வருவதும், 'ஸ்தூல சூட்சும காரண சரீரங்களிலிருந்து என்னை விடுவிப்பாயாக!' என்று வேண்டுவதாகும்.

17. நந்தி தேவர் சிறப்பு யாது?

'நந்தி' என்ற சொல்லுக்கு 'எப்போதும் ஆனந்தமாக இருப்பவர்' என்று பொருள். லிங்கத்தின் முன்பிருந்து அதனைப் பார்த்துக் கொண்டிருப்பது போல் அமைக்கப் பட்டுள்ளது. நந்தி தேவரே இறைவனிடத்திலிருந்து சிவாகமங்களைத் தெரிந்து நமக்கு அருளினார் என்பது மரபு. எனவே, சைவ சமயத்திற்கு இவரே முதற்குரு. ஆகவேதான் 'நம் குரு மரபிற்கெல்லாம் முதற்குரு நாதனாகி' என்று நந்தி தேவரைத் திருமூலர் குறிப்பிடுகிறார்.

நந்தி தேவருக்கு நெற்றிக் கண்ணும் நான்கு புயங்களும் கையில் பொன் பிரம்பும் உடைவாளும் இரு புயங்களில் மான் மழுவும் உள்ளன. சிவபெருமான் ஆலயத்தில் இவரே பொற் பிரம்பு ஏந்தி காவல் தொழிலைச் செய்கின்றார். இவரது அனுமதி பெற்றே சிவதரிசனம் செய்ய வேண்டும் என்பது மரபு.

18. கருவறையில் எந்தெந்த மூர்த்திக்கு நேராக எந்தெந்த வாகனங்கள் பிரதிஷ்டை செய்யப்படும்?

சிவபெருமான் எதிரில் நந்தி

அம்பாளின் எதிரில் சிங்கம்

விநாயகர் எதிரில் மூஷிகம் (பெருச்சாளி)

திருமாலின் எதிரில் கருடன்

முருகன் எதிரில் மயில்

ஆகியவை பிரதிஷ்டை செய்யப்படும்.

19. கொடிக் கம்பத்தின் அமைப்பு முறையை விவரி?

கரம், வகுளம், தாளம், ஹிந்தாளம், கருங்காலி மற்றும் தேவதாரு இவற்றையே கொடி மரம் தயாரிக்கப் பயன் படுத்துவர். கம்பத்தின் ஐந்தில் ஒரு பங்கு பூமியிலிருக்கும் படி நடுவர். அதன் அடியிலிருந்து உச்சிவரை ஏழு பாகமாக்கி சதுரகோண விருத்த வடிவங்களில் அமைப்பர். சதுர பாகம் பிரம்ம பாகமாகும். அதன் மேல் விஷ்ணு பாகம் எண்கோண வடிவம், அதன் மேலுள்ளது ருத்ர பாகம்.

இதன் பீடம் பத்ர பீடம் எனப்படும். இறைவனிடம் பாசக் கட்டு அறுமாறு மனத்தைப் பலியிட வேண்டும் என்பதற்காக ஆன்மாவைப் பாசக் கயிறு சுற்றியுள்ளதை நினைப்பூட்டும் வகையில் கொடிக் கம்பத்தில் கயிறு சுற்றியிருக்கும்.

20. ஆலய விழாக்களில் முதல்நாள் கொடியேற்றுவதன் நோக்கம் யாது?

கொடியேற்றுவது ஆகம விதிப்படி நடைபெறுகிறது. கொடி மரம் - சிவபெருமான், கொடிக் கயிறு - திருவருட்சக்தி, கொடித் துணி - ஆன்மா, தர்ப்பைக் கயிறு - பாசம்.

மும்மல வயப்படும் ஆன்மா திருவருட் சக்தியினால் பாசம் அற்று, சிவஞான வடிவமாகிய பதியின் திருவடியை அடைதல் என்னும் முறையை இந்நிகழ்ச்சி காட்டுகிறது.

21. ஒவ்வொரு ஆலயத்திலும் தல மரம் இருப்பது ஏன்?

பண்டை நாட்களில் ஆகம விதிப்படி கட்டப்பட்ட கோயில்கள் யாவும், இன்று நாம் வெற்று நிலத்தில் கட்டுகிற கோயில்களைப் போல கட்டப்பட்டவை அல்ல. இடத்தின் சிறப்பு, தீர்த்த மகிமை, ஏதேனும் ஓர் அற்புதம் நிகழ்ந்த இடம், எவரேனும் சித்தி பெற்ற, இறையருள் பெற்ற இடம், எவருக்கேனும் இறைவன் காட்சி தந்த இடம், தேவர், முனிவர், மகரிஷி போன்றோர் தவம் செய்த இடம் முதலிய சிறப்பு வாய்ந்த இடங்களிலேதான் கட்டப்பட்டன.

பண்டைக்காலத்தில் மகரிஷிகள் போன்றோர் மரங்களின் அடியில்தான் தவம், தியானம் செய்தனர். எந்தெந்த மரங்களின் அடியில் தவம் செய்தால் எந்தெந்த அளவுக்குப் பலன் கிடைக்கும்; எந்தெந்த மரத்தினடியில் இருந்து எந்தெந்த மந்திரங்களை உச்சரிக்க வேண்டும். எந்தெந்த தேவதைகளைத் தியானிக்க வேண்டும் என்றெல்லாம் நூல்களில் கூறப்பட்டுள்ளன. அந்தந்த முறைகளில் எந்தெந்த தலத்தில் யார் யார் எந்தெந்த மரத்தின் கீழிருந்து தவம், தியானம் செய்து சித்தி பெற்றார்களோ அந்தந்த தலத்திலுள்ள அந்தந்த மரங்கள் தல மரங்களாகப் போற்றப்பட்டு - வழிபடப்பட்டு வருகின்றன.

தலத்திற்குரிய மரம் தல விருட்சம் எனப்பட்டது.

22. ஆலய மூர்த்தங்களின் சிறப்பு என்ன?

பசுவின் பால் காம்புகள் வழியே கிடைப்பதுபோல் இறைவன் அருள் எல்லா இடங்களிலும் நீக்கமறப் பரவி இருந்தாலும் நமக்குக் கோயிலிலுள்ள மூர்த்தங்களின் வழியாகவே கிடைக்கிறது. ஆதலின் கோயிலுக்குச் சென்று இம்மூர்த்தங்களை வழிபட வேண்டியதும் அவைகளுக்குச் செய்ய வேண்டிய பூசைகள், வழிபாடுகள் முதலியவற்றைத் தவறாமல் முறையாகச் செய்ய வேண்டியதும் மிகவும் அவசியம்.

23. கோயிலின் பிரகாரங்களை வலம் வருவதன் சிறப்பைக் கூறுக?

கோயிலில் பிரகாரங்கள் 3, 5, 7 என்ற எண்ணிக்கையில் அமைந்திருக்கும். அன்னமயம், பிராணமயம், மனோமயம் ஆகிய மூன்று கோசங்களை உணர்த்துகின்றன. இவற்றுடன் விஞ்ஞான மயம், ஆனந்த மயம் ஆகியவற்றையும் இந்த ஐந்துடன் ஸ்தூலம், சூட்சுமம் ஆகியவற்றையும் உணர்த்துகின்றன. பிரகாரங்களை வலம் வருவது இக்கோசங்களைக் கடந்து இறைவன் விளங்குகிறான் என்பதை உணர்த்துகிறது. பிரகாரங்களை வலம் வந்து, கடந்து சென்று மூலவரைத் தரிசிப்பது, கோயில்களைக் கடந்து இறை தரிசனமும் அருளும் பெறுகிறோம் என்பதைக் குறிப்பதாகும்.

24. எந்தெந்த இறைவனுக்கு எத்தனை முறை வலம் வர வேண்டும்?

விநாயகருக்கு ஒரு முறையும், சூரியனுக்கு இரண்டு முறைகளும், சிவபெருமானுக்கு மூன்று முறைகளும், அம்பிக்கைக்கு ம் திருமாலுக்கும் நான்கு முறைகளும், அரச மரத்தை ஒரு முறையும் வலம் வர வேண்டும். இவை குறைந்தபட்ச அளவு. ஒரு குறிப்பிட்ட பயனைக் கருதி வலம் வருவோர் அதிகபட்சமாக இருபத்தியொன்று, நூற்றியெட்டு என்ற எண்ணிக்கையிலும் வலம் வரலாம்.

25. அடி தண்ட பிரதட்சிணம் (வலம்) என்பது யாது?

உடம்பு தரையில் படும்படி படுத்துக் கொண்டே வலம் வருவது அங்கப் பிரதட்சிணமாகும். ஒரு அடிக்கு ஒருமுறை கைகூப்பி வணங்கி வலம் வருவது அடி தண்ட பிரதட்சிணமாகும்.

26. இருவகைப் பூசைகளைப் பற்றிக் கூறுக?

*1) ஆத்மார்த்த பூசை:* தீட்சை பெற்றோர் வீட்டில் செய்வது.

*2) பரார்த்த பூசை:* அரசன், நாடு, மக்கள், உயிர்கள் இவர்கட்கு நலன்கள் விளைய கோயிலில் செய்யப்படும் பூசை. இது நித்யம், நைமித்யம், காமியம் என மூன்று வகைப்படும். நாள்தோறும் செய்வது நித்யம். மாதாந்திர சிறப்பு வழிபாடு ஆகந்துக நித்யம் எனப்படும்.

27. நித்ய, நைமித்ய, காமிய பூசைகள் - விவரி.

*1) நித்ய பூசை:* தினமும் கோயிலில் நடப்பது.

*2) நைமித்யம்:* ஒரு காரியத்தின் பொருட்டுச் செய்யும் பூசைகள் (கிரகண காலம், தீட்டு, ஆசாரங் கெடல்) முதலிய சமயங்களில் அவற்றிற்காகச் செய்யப்படுவது.

*3) காமியம்:* ஒரு விருப்பத்தின் பொருட்டு, பலனை எதிர்பார்த்துச் செய்யப்படுவது.

வேள்விகளிலும் இந்த முறைகள் உண்டு. அன்றாடம் செய்யும் அக்னி ஹோத்ரம், ஆண்டுக்கொரு முறை, விசேடமாக உள்ளதைச் செய்தால்தான் நித்யம் பூரணமாகும் என்று வருவதைச் செய்வது, பலனை

எதிர்பார்த்துச் செய்வது என மூன்றாகும். யாகத்தைக் கர்மா என்றும் அழைப்பர்.

28. சிவ பூசைக்கான சிறப்பான வார நைவேத்தியங்கள் யாவை?

| | | |
|---|---|---|
| ஞாயிறு | - | பாயச அன்னம் |
| திங்கள் | - | வெண் பொங்கல் |
| செவ்வாய் | - | எள் அன்னம் |
| புதன் | - | சர்க்கரைப் பொங்கல் |
| வியாழன் | - | தயிர் அன்னம் |
| வெள்ளி | - | சுத்த அன்னம் |
| சனி | - | உளுந்து அன்னம் |

29. அபிஷேகம் செய்வதன் நோக்கம் யாது?

திருவருள் ஞானமே நீர் எனப் பாவித்து, மருள் ஞானமே மலம் ஆதலால் அம்மல அசுத்தத்தை அருள்நீர் கொண்டு சுத்தி செய்தல் என்னும் பாவனையே அபிஷேகம் செய்வதன் நோக்கம் ஆகும்.

30. அபிஷேகப் பொருள்கள் தரும் பலன்கள் யாவை?

எண்ணெய் - சுகம்; மாப்பொடி - கடன் போக்குதல், நெல்லி முள்ளிப்பொடி - நோய் நீக்குதல், மஞ்சள் தூள் - வசீகரணம், பஞ்சகவ்யம் - தூய்மை; பஞ்சாமிர்தம் - வெற்றி, பால் - ஆயுள், தயிர் - மக்கட்பேறு, நெய் - முத்தி, தேன் - சுகம், கரும்புச்சாறு - பிணி நீக்கம், உரித்த வாழைப்பழம் - பயிர் செழித்து வளர்தல் முதலியன. பழச்சாறு - எம பய நீக்கம், இளநீர் - போகம், சந்தனம் - லட்சுமி கரம், கும்பம் - குற்றம் பொறுத்தல்.

31. எந்தெந்தக் காலங்களில் தரிசனம் கூடாது?

காலையில் கோயில் திறந்த உடனேயே சென்று தரிசிக்கக் கூடாது.

சிவாச்சாரியார் முதலில் தீபமேற்றி ஆராதனை செய்தபிறகே நாம் சென்று தரிசிக்க வேண்டும்.

திரை போடப்பட்ட காலங்களிலும், ஆடையின்றி அபிஷேகம் செய்யும் போதும், சந்நிதியில் தீபம் இல்லாத போதும் தரிசனம் செய்தல் கூடாது.

பரிசுத்தமான ஆலயத்திற்குச் சென்று வீடு திரும்பி வந்ததும் உடனே கால்களைக் கழுவக்கூடாது. சிறிது நேரம் கழித்த பின்பே கழுவ வேண்டும்.

32. அபிஷேக காலத்தில் வலம் வந்து வணங்கலாமா?

அபிஷேக வேளையில் உட்பிரகாரத்தில் வலம் வந்து வணங்கக் கூடாது. அபிஷேகம், நிவேதனம் முதலியவை நடைபெறும்போதும், திரை போட்டிருக்கும் போதும் இறைவனை தரிசனம் செய்தலாகாது.

33. பூசை என்பதன் பொருள் என்ன?

அனைத்து காமாக்களையும் பூர்த்தி செய்வதாலும், ஞானத்தைக் கொடுப்பதாலும் பூசை எனப்படுகிறது.

34. ஆறுகால பூசைகள் எவை?

1) உஷத் காலம் 2) கால சந்தி 3) உச்சிக் காலம் 4) சாய ரட்சை 5) பிரதோஷம் 6) அர்த்த சாமம்

35. பூசையின் போது மணியடிப்பதன் காரணம் என்ன?

மணியின் ஒலி ஓங்கார நாதமாகும். தேவதைகளை அழைக்கவும், அசுர சக்திகளை விரட்டவும், மணியோசை எழுப்பப்படுகிறது.

36. திரை போடப்படுவதன் தத்துவம் என்ன?

உள்ளத்துள் உறைகின்ற ஆண்டவனை மாயா மயக்கம் என்கிற திரை மறைப்பதை இந்த வெளித்திரை உணர்த்துகிறது.

37. பூசையின் போது குத்து விளக்கு ஏற்றுவதன் நோக்கம் என்ன?

பூசையின் போது விளக்கு மிகவும் அவசியம். இறைவன் ஜோதிமயமானவன். தீபம் ஞானத்தைக் குறிக்கிறது. ஞானம்தான் இறைவனை உணர்த்தும். உள்ளத்தால் இறைவனை தியானிப்பவருக்கு ஞானமே விளக்காகிறது.

38. தெய்வ வழிபாட்டில் செய்ய வேண்டிய முக்கியமான பதினாறு உபசாரங்கள் யாவை?

1) ஆவாஹனம் (பூசை செய்யப்பட வேண்டிய உருவத்தில் இறைவனை எழுந்தருளும்படி வேண்டுதல்)

2) இறைவன் அமர ஆசனம் அளிப்பது 3) பாத்யம் 4) அர்க்யம் 5) ஸ்நானம் 6) வஸ்த்ரம் 7) ஆசம நீயம் 8) சந்தனம் அணிவித்தல் 9) மலர்களால் அலங்கரித்து அர்ச்சனை செய்தல் 10) தூபம் காட்டுதல் 11) தீபம் காண்பித்தல் 12) நிவேதனம் செய்தல் 13) தாம்பூலம் சமர்ப்பித்தல் 14) கற்பூர ஆரத்தி செய்தல் 15) புஷ்பாஞ்சலி சமர்ப்பித்தல் 16) பிரதட்சிணம் என்பது வலம் வந்தபின் பிழைகள் அனைத்தையும் மன்னிக்கும்படி வேண்டி தன்னையே முழுமையாக இறைவனிடம் அர்ப்பணித்து வழிபடுதல்.

39. பஞ்சாயதன பூசை என்பது யாது?

ஆதித்யன், அம்பிகை, விஷ்ணு, கணபதி, மகேச்வரன் ஆகிய ஐந்து தெய்வங்களையும் வழிபடுவது பஞ்சாய தனமாகும். இம்முறை ஆதி சங்கரரால் தோற்றுவிக்கப் பட்டது. பரம்பொருளின் ஆற்றல் கணபதி, சூரியன், சிவன், சக்தி, விஷ்ணு போன்ற பல்வேறு நிலைகளில் வெளிப்படுகிறது. இதனையே பஞ்சாயதன பூசை என்பர்.

40. பஞ்ச சுத்திகள் யாவை?

1) ஆத்ம சுத்தி - வழிபாடு செய்வோர் தன் மேனியைத் திருக்கோயிலில் உள்ளே இருக்கும் திருமேனி போன்று தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

2) ஸ்தான சுத்தி - வழிபடும் இடத்தைச் சுத்தப்படுத்தல்.

3) திரவிய சுத்தி - பூசைக்குரிய பாத்திரங்களை நன்கு கழுவித் தூய்மை செய்து பூசைக்குரிய பொருட்களில் அர்க்கிய நீரைத் தெளித்துச் சுத்தமாக்கி வைத்தல்.

4) மந்திர சுத்தி - மூல மந்திரத்தை முறைப்படி ஜெபித்தல்.

5) லிங்க சுத்தி - அபிஷேகப் பாத்திரத்தில் நீர் நிரப்பி அதில் தீர்த்தங்களை ஆவாஹனம் செய்தல் - லிங்கத்தை அபிஷேகம் செய்து - தூய ஆடை உடுத்துதல்.

41. அபிஷேக தீர்த்த மகிமை யாது?

அபிஷேக தீர்த்தம் மிகவும் புனிதமானது. இதனை இரு கைகளாலும் பெற்று அப்படியே உட்கொள்ள வேண்டும்.

அவ்வாறு பெறும்போது விரல்களின் இடுக்கில் கீழே சிந்தாமல் இருக்க வேண்டும் என்பதற்காக கைகளின் அடியில் துணியை வைத்துப் பிடிக்கும் பழக்கம் ஏற்பட்டது.

உட்கொண்ட பின்பு கைகளில் ஒட்டியிருக்கும் நீரும் கீழே சிந்தாமல் இருக்க வேண்டும் என்பதால் கைகளையே ஒன்றின் மீது ஒன்றாகத் தேய்த்துக் கொள்வதும், கைகளைத் தலையில் தேய்த்துக் கொள்வதும் ஆகிய பழக்கங்கள் ஏற்படலாயின. அபிஷேக தீர்த்தம் சிறிதும் கீழே சிந்தலாகாது என்பதே இவற்றின் அடிப்படை.

42. பஞ்ச கவ்யம் என்பது என்ன?

பசுவின் பால், தயிர், நெய், கோமியம் (மூத்திரம்), சாணம் என்ற ஐந்தும் சேர்ந்ததே பஞ்ச கவ்யம். இவை ஐந்தும் பசுவினிடமிருந்து கிடைப்பதால் ஆன் ஐந்து என்றும் வழங்கப்படுகிறது.

43. இறை வழிபாடு முதலிய செயல்கள் எத்திசை நோக்கிச் செய்தல் வேண்டும்? எத்திசைகளில் கூடாது?

கிழக்கு, வடக்கு திசைகள் நோக்கிச் செய்தல் நலம். தெற்கு நோக்கிச் செய்தல் கூடாது.

44. சிவராத்திரியில் வேளைகள் தோறும் இறைவனுக்குச் செய்ய வேண்டிய அபிஷேக ஆராதனை முறைகளை விவரி?

முதல் யாமம்: பஞ்ச கவ்ய அபிஷேகம், சந்தனப் பூச்சு, வில்வம், தாமரை அலங்காரம், அர்ச்சனை, பச்சை பயிற்றுப் பொங்கல் நிவேதனம், ரிக் வேதம் பாராயணம்.

இரண்டாம் யாமம்: சர்க்கரை, பால், தயிர், நெய் கலந்த ரச பஞ்சாமிர்தம் அபிஷேகம், பச்சைக் கற்பூரம், பன்னீர் சேர்த்து அரைத்துச் சாத்துதல், துளசி அலங்காரம், தாமரை அர்ச்சனை, பாயசம் நிவேதனம், யஜுர் வேதம் பாராயணம்.

மூன்றாம் யாமம்: தேன் அபிஷேகம், பச்சைக் கற்பூரம் சாத்துதல், மல்லிகை அலங்காரம், வில்வம் அர்ச்சனை, எள் அன்னம் நிவேதனம், சாம வேதம் பாராயணம்.

நான்காம் யாமம்: கருப்பஞ்சாறு அபிஷேகம், நந்தியா வட்டை மலர் சாத்துதல், அல்லி நீலோற்பலம், நந்தியாவர்த்தம், அலங்காரம், அர்ச்சனை, சுத்த அன்னம் நிவேதனம், அதர்வண வேத பாராயணம்.

45. மும்மூர்த்திகள் யாவர்?

படைக்கும் கடவுளான பிரம்மா, காக்கும் கடவுளான விஷ்ணு, அழிக்கும் கடவுளான சிவபெருமான் ஆகிய மூவரும் மும்மூர்த்திகள்.

46. ஆலய வழிபாடு இல்லாத இந்து தெய்வம் எது?

பிரம்ம தேவன்.

47. நவக்கிரகங்களுக்குரிய சேத்திரங்கள் யாவை?

சூரியனார் கோயில், திருப்பதி, காளஹஸ்தி, பழநி, மதுரை, திருச்செந்தூர், திருநள்ளாறு, திருவரங்கம்.

48. மன நோய்களைக் குணப்படுத்தும் தென்னகக் கோயில்கள் எவை?

1) சோளிங்கபுரம் - ஸ்ரீ யோக நரசிம்மர்

2) குணசீலம் - பெருமாள்

3) சோட்டானிக்கரை - பகவதி அம்மன்

49. பஞ்ச பூத ஸ்தலங்கள் யாவை?

காஞ்சி, திருவானைக்காவல், காளத்தி, திருவண்ணாமலை, சிதம்பரம் என இவ்வைந்தும் பஞ்சபூத ஸ்தலங்களாகும்.

50. சூரியனுக்காக அமைந்த மிகப் பெரிய கோயில் எங்குள்ளது?

ஒரிஸ்ஸா மாநிலத்தில் கோனார்க் என்னும் இடத்திலுள்ளது.

51. ஒவ்வொரு இந்துவும் தினமும் காலையில் நினைவு கூறும் சேத்திரங்கள் யாவை?

அயோத்தி, மதுரா, மாயாபுரி, காசி, காஞ்சி, அவந்திகா, துவாரகை ஆகிய ஏழு முக்கிய சேத்திரங்களும் நினைத்தவுடன் முக்தி அளிப்பவையாகும்.

52. திருக்கோயிலில் எந்த இடத்தில் இறைவனை வீழ்ந்து வணங்க வேண்டும்?

திருக்கோயிலில் கொடி மரம் இருக்கும் இடத்தில்தான் இறைவனை வீழ்ந்து நமஸ்கரிக்க வேண்டும். மற்ற இடங்களில் அவ்வாறு வணங்கக் கூடாது.

53. சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதன் நோக்கம் என்ன?

சாஷ்டாங்க நமஸ்காரம் என்பது நமது உடலிலுள்ள எட்டு அங்கங்களும் பூமியில் படும்படி வீழ்ந்து வணங்குதலால் தமிழில் தண்டனிடுதல் எனக் கூறுவர். ஆதாரமற்ற ஒரு தண்டம் அல்லது கோல் கீழே விழுந்து விடுவதைப்போல இறைவனையே அடைக்கலமாகக் கொண்டு அவனை முழுவதும் சரணடைவதன் வெளிப்பாடே சாஷ்டாங்க நமஸ்காரம்.

54. நடராசர் அபிஷேகத்திற்குரிய சிறப்பு நாட்கள் யாவை?

1) சித்திரை - திருவோண நட்சத்திரம் 2) ஆனி - உத்திர நட்சத்திரம் 3) ஆவணி - வளர்பிறை சதுர்த்தி 4) புரட்டாசி - வளர்பிறை சதுர்த்தி 5) மார்கழி - திருவாதிரை 6) மாசி - வளர்பிறை சதுர்த்தி. ஆனி, மார்கழி மாதச் சிறப்பு நாட்களில் காலை அபிஷேகம், தரிசனம்.

55. ஐவகை உபசாரங்கள் யாவை?

கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் என்பன.

56. சுவாமி அலங்காரத்திற்குரிய இரத்தினங்கள் யாவை?

மாணிக்கம், முத்து, பவழம், மரகதம், புஷ்பராகம், இந்திர நீலம் முதலியன.

57. பூசைக்குரிய பத்திரங்கள் எவை?

துளசி, மகிழம், சண்பகம், தாமரை, வில்வம், மருக் கொழுந்து, தர்ப்பை, அறுகு, விஷ்ணு கிரந்தி, நெல்லி முத லிய இவற்றின் பத்திரங்கள் பூசைக்குரியவைகள் ஆகும்.

58. அர்ச்சனைக்குரிய பத்திரங்கள் யாவை? விவரி.

வில்வம், துளசி, மருக்கொழுந்து, நொச்சி, கரந்தை, மாசிப்பச்சை, கதிர் பச்சை, எலுமிச்சை, கிளுவை, வன்னி,

மாவிலங்கை, விளாமிச்சை, இலந்தை முதலிய பலவகைப் பத்திரங்கள் உள்ளன. இப்பத்திரங்கள் மலர்களுக்கு சமமாகக் கருதப்படுவதால் இவைகளும் அர்ச்சனைக்கு உரியவையே ஆகும். இவைகளில் மிகவும் உயர்ந்ததாகக் கருதப்படுவது வில்வ பத்திரம். வில்வம் சிவ சொரூபமே. இது பூசிப்பவரையும் புனிதமாக்கும். வில்வார்ச்சனைப் பயன் அளப்பரியது.

59. வில்வத்தின் மகிமை யாது?

வில்வத்தில் லட்சுமி வாசம் செய்கிறாள். ஒரு வில்வதளம் லட்சம் ஸ்வர்ண புஷ்பத்திற்குச் சமம். ஒரு வில்வ தளம் சிவனுக்கு அர்ப்பித்தால் மகா பாவங்கள் யாவும் விலகி சகல மேன்மைகளும் உண்டாகும். மாதப் பிறப்பு, சோமவாரம், அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தி, அஷ்டமி, நவமி நாட்களில் வில்வம் பறிக்கக் கூடாது. இந்த நாட்களில் பூசைக்குத் தேவையான வில்வத்தை முதல் நாள் மாலையிலேயே பறித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

60. யார் யாருக்கு எந்தெந்த மலர்கள் ஆகாதவை?

| | | |
|---|---|---|
| விநாயகருக்கு | - | துளசி |
| தேவிக்கு | - | அருகம்புல் |
| சூரியனுக்கு | - | வில்வம் |
| விஷ்ணுவுக்கு | - | எருக்கம்பூ, ஊமத்தம்பூ |

விநாயக சதுர்த்தி நாளில் மட்டும் விநாயகரை அர்ச்சிக்கத்தக்க 21 வகை பத்திரங்களுள் துளசியும் ஒன்றாகச் சிறப்பாகக் கூறப்படுகிறது.

61. நால்வகைப் பூக்கள் யாவை?

1) கோட்டுப்பூ: கொன்றை, சண்பகம், மகிழம், மந்தாரை, பாரிசாதம், பாதிரி முதலியவை.

2) கொடிப்பூ: முல்லை, மல்லிகை, இருவாட்சி முதலியன.

3) நீர்ப்பூ: தாமரை, நீலோற்பவம் முதலியவை.

4) நிலப்பூ: தும்பை முதலியவை.

62. பஞ்ச வில்வங்கள் என்பன யாவை?

1) வில்வம் 2) கிளுவைப் பத்திரம் 3) மாவிலங்கை 4) விளா 5) நொச்சி

63. மலர்களின் குணங்களை விவரி?

1) வெண் மலர்கள் - சத்துவ குணம் உடையவை.

2) செம் மலர்கள் - ரஜோ குணமுடையவை.

3) கரிய மலர்கள் (நீலோற்பவம் தவிர) - தமோ குணம் உடையவை.

4) பத்திரங்கள் - மக்கட் செல்வத்தைத் தருவன.

5) மஞ்சள் நிற மலர்கள் - மங்களகரமானவை.

64. அஷ்ட புஷ்பங்கள் எவை?

எருக்கமலர், தாமரை, புன்னை, நந்தியாவட்டை, பாதிரி, அரளி, சண்பகம், நீலோற்பவம் ஆகியவை.

மலர்களை முழுமையாக இட்டுத்தான் வழிபட வேண்டும்.

65. உதய கால பூசைக்கு ஏற்ற மலர்கள் யாவை?

நந்தியாவட்டை, சிரியாவர்த்தம், வெள்ளெருக்கு, வெண்தாமரை, புன்னை முதலிய மலர்கள்.

66. நண்பகல் அர்ச்சிப்பதற்குரிய மலர்கள் யாவை?

செந்தாமரை, செங்கழுநீர், செவ்வலரி, செங்கடம்பு முதலிய செந்நிற மலர்கள் மத்தியான அர்ச்சனைக்கு உகந்தவை.

67. சாயரட்சை, அர்த்த சாம காலங்களில் அர்ச்சிப்பதற்குரிய மலர்கள் யாவை?

வெள்ளெருக்கு, வெள்ளலரி, பிச்சி, கொக்கிறகு, மந்தாரை, புன்னை, நந்தியா வர்த்தம்.

68. கற்பூர ஆரத்தியின் தத்துவம் என்ன?

ஆத்மா பரமாத்மாவோடு கலப்பதைக் குறிக்கிறது. கற்பூரம் வெண்மையானது. அது சுத்த சத்துவ குணமுள்ள ஆத்மாவைக் குறிக்கும். கற்பூரத்தை ஏற்றியவுடன்

தீபம்போல் எரியும். ஞானாக்கினியால் மலம் நீங்கப் பெற்ற ஆன்மாவானது சிவகரணம் பெற்று நிற்பதைக் காட்டும். கற்பூரம் ஒன்றுமின்றிக் கரைந்து போவதுபோல ஆன்மாவானது சரீரங்களெல்லாம் நீங்கி இறைவனோடு ஒன்றுபடும். இதைக் காட்டுவதே கற்பூர தீபாராதனையின் தத்துவம்.

69. பஞ்ச புராணங்கள் எவை?

1) தேவாரம் 2) திருவாசகம் 3) திருவிசைப்பா 4) திருப் பல்லாண்டு 5) பெரிய புராணம் என்ற வகையில் திருமுறை களைப் பாடுவது பஞ்ச புராண முறை எனப்படும்.

70. நமஸ்கார வகைகளை விவரி?

தலை மட்டும் குனிந்து வணங்குதல் - ஏகாங்க நமஸ்காரம்

தலைமேல் இருகரம் கூப்பி வணங்குதல் - திரியங்க நமஸ்காரம்

கையிரண்டு, முழந்தாள் இரண்டு, சிரம் ஆக ஐந்தும் நிலம் பொருந்த வணங்குதல் - பஞ்சாங்க நமஸ்காரம்.

தலை, கையிரண்டு, இரு செவிகள், இரு முழந்தாள், மார்பு இவை பூமியில் படும்படி வணங்கல் - அஷ்டாங்க நமஸ்காரம்.

நம் உடலில் உள்ள எட்டு அங்கங்களும் பூமியில் படும்படியாக வீழ்ந்து வணங்குதல் - சாஷ்டாங்க நமஸ்காரம்.

71. பஞ்சாங்க நமஸ்காரம் என்பது யாது?

தலை, இரு கைகள், இரு முழந்தாள்கள் ஆகிய ஐந்து அங்கங்களும் நிலத்திலே படுமாறு வீழ்ந்து வணங்குவது பஞ்சாங்க நமஸ்காரம் எனப்படும்.

இதனைப் பெண்களும் செய்யலாம்.

72. பெண்கள் எவ்வாறு அங்கப் பிரதட்சணம் செய்யலாம்?

பெண்கள் மார்பு பூமியில் படாதவாறு வணக்கம் செய்ய வேண்டும். எனவே பெண்கள் அங்கப் பிரதட்சணம் செய்யக்கூடாது.

73. நவக்கிரகங்களுக்குரிய வாகனங்கள் யாவை?

| | |
|---|---|
| 1) சூரியன் | - ஏழு குதிரைகள் பூட்டிய ரதம் (அருணன் தேரோட்டி) |
| 2) சந்திரன் | - முத்துவிமானம், மான் |
| 3) செவ்வாய் | - அங்காரகன் (ஆடு) |
| 4) புதன் | - குதிரை |
| 5) குரு | - யானை |
| 6) சுக்கிரன் | - கருடன் |
| 7) சனி | - காகம் |
| 8) ராகு | - சிம்மம் |
| 9) கேது | - புறா (அன்னத்தையும் கூறுவர்) |

74. சண்டேசுவரர் வழிபாடு - விவரி?

சண்டேசுவரரைத் தரிசித்தால்தான் சிவதரிசனப் பலன் பூர்த்தியாகும். சிவாலயத்துள் மூலவரைத் தரிசித்தபின் வலமாக வந்து சண்டேசுவரர் சந்நிதி முன் சென்று அவர் முன் மூன்று முறை கையால் மெதுவாகத் தாளமிட்டுத் தரிசனப் பலனைத் தருமாறு கைகூப்பி வேண்டி சென்ற வழியே திரும்பி வரவேண்டும். அவரை முழு வலமாகச் சுற்றக் கூடாது.

75. 'பிரதோஷம்' என்பதன் பொருள் என்ன? அதன் சிறப்பு என்ன?

காலை வேளையை உஷா என்பர். இரவு முன் நேரம் தோஷா. இக்காலம் வழிபாட்டிற்கு உரியதாகும். அவற்றிலும் பிரதோஷ காலம் என்பது சிவ வழிபாட்டிற்கே உரிய காலமாதலால் அவ்வேளையை மேலான தோஷா என்ற பொருளில் பிரதோஷா - பிரதோஷம் என்று அழைக்கின்றனர்.

வளர்பிறையில் திரயோதசி அன்றும், தேய்பிறையில் திரயோதசி அன்றும் மாலை 4.30 மணி முதல் 6 மணி வரையிலும் உள்ள காலம் பிரதோஷ காலம் எனப்படும். இறைவன் நந்தியின் இரு கொம்புகளுக்கு மத்தியில் நின்று நடனம் செய்து தேவர்களுக்குத் தரிசனம் தந்தருளிய

சிறப்புடைய வேளை இது. எனவே இந்த வேளையை பிரதோஷ புண்ணிய காலம் என்று வழங்கப்படுகிறது. இந்தக் காலத்தில் சிவபெருமானை வழிபடுவது மிகப் பெரும் புண்ணியச் செயலாகும். சிவதரிசனத்திற்கே உரிய காலமாகும்.

76. காலங்களுக்குரிய சிவதரிசனப் பயன்கள் யாவை?

காலை தரிசனம் - பிணி போக்கும்
நண்பகல் - செல்வம் பெருக்கும்
சந்தியா காலம் - பாவம் போக்கும்
அர்த்த சாமம் - வீடுபேறு அளிக்கும்

77. இறைவன் நடனம் புரியும் தத்துவம் என்ன?

ஆன்மாக்களை அருளால் உயர்த்தி ஆனந்தக் கடலில் மூழ்கியிருக்கச் செய்வதே இறைவன் நடன தாண்டவக் கருத்தாகும்.

78. தீர்த்தவாரியின் பொருள் யாது?

உயிர்கள், இறைவனின் அருட்கடலில் மூழ்கி புனித மடைந்து வீடு பேறு அடைவதையே தீர்த்தவாரி என்பர்.

79. உழவாரத் தொண்டு - விவரி?

திருக்கோயிலில் உள்ள கற்கள், முட்கள், தேவையற்ற செடிகள் முதலியவற்றை அகற்றித் திருக்கோயிலைப் பராமரிக்கும் தொண்டே உழவாரத் தொண்டாகும். அதற்குப் பயன்படும் கருவியே உழவாரப் படையாகும்.

80. சிவாலயங்களில் செய்யத்தக்கன யாவை?

1) நீராடித் தூய ஆடை உடுத்தித் திருநீறு அணிந்து, முடிந்தால் உத்ராட்சமும் அணிந்து செல்ல வேண்டும்.

2) மலர், தேங்காய், பழம், பூ, சூடம் ஆகியவற்றுள் இயன்றதை எடுத்துச் செல்ல வேண்டும்.

3) கோபுரத்தைக் கண்டதும் கை கூப்பி வணங்க வேண்டும்.

4) ஐந்தெழுத்து மந்திரத்தை மனதில் ஜபித்தவாறே செல்ல வேண்டும்.

5) தல விநாயகரை வணங்கி, குட்டிக் கொண்டு தோப்புக் கரணம் போட்டவாறே உள்ளே செல்ல வேண்டும்.

6) பலி பீடம், நந்தி ஆகியவற்றை வணங்கிச் செல்ல வேண்டும்.

7) உள்ளே மூலவரை வணங்கிச் சுற்றிலுமுள்ள உற்சவ மூர்த்திகளையும், சண்டேசுவரரையும் வணங்க வேண்டும். பிற சந்நிதிகளையும் வணங்க வேண்டும்.

8) திருநீற்றினை இரு கரங்களால் பெற்று கீழே சிந்தாமல் பூசிக் கொள்ள வேண்டும்.

9) ஆலயப் பிரகாரத்தை மும்முறையாவது வலம் வர வேண்டும்.

10) தரிசனம் செய்யும்போது அந்தந்த சந்நிதிக்கேற்ப துதிப்பாடல்களைப் பாடவேண்டும்.

11) வெளியில் வந்ததும் கொடி மரத்தின் கீழ் விழுந்து வணங்க வேண்டும். (வேறெங்கும் தரையில் விழுந்து வணங்கக் கூடாது.)

12) சிறிது நேரம் அமர்ந்து ஜபத் தியானம் செய்தபின் சிவ சிந்தனையுடன் செல்ல வேண்டும்.

81. சிவாலயங்களில் செய்யத் தகாதன யாவை?

தூய்மையில்லாமல் செல்லல், காலணிகளுடன் செல்லுதல், சமயச் சின்னங்கள் அணியாமல் செல்லுதல், பேசிக் கொண்டே செல்லல், விவாதம் செய்தபடியே செல்லுதல், இடித்து நெருக்கிக் கொண்டே செல்லுதல், எச்சில் துப்புதல், நிர்மாலியத்தை மிதித்தல், விக்ரகங்களைத் தொடுதல், பலி பீடம், நந்தி இவற்றின் குறுக்கே செல்லுதல், ஒரு கையால் கும்பிடுதல் முதலியன செய்தல் கூடாது.

82. எத்தகையோர் ஆலயத்திற்குள் செல்லக் கூடாது?

ஸ்நானம் செய்யாதோர், தூய ஆடை உடுத்தாதோர், வீட்டில் பிறப்பு இறப்பு நேர்ந்து ஏற்பட்ட தீட்டு உடையோர், மாத விலக்குடைய பெண்கள் போன்றோர் கோயிலுக்குள் செல்லக் கூடாது.

83. சைவச் சின்னங்கள் மூன்றைக் கூறு?

விபூதி, ருத்ராட்சம், வில்வம்.

84. விபூதி எதைக் குறிக்கிறது?

ஞானம் என்னும் தீயில் வினைகள் யாவும் சுட்டெரிக்கப்பட்டபின் எஞ்சி நிற்பது பரிசுத்தமான சிவ தத்துவமே என்பதைக் குறிப்பதே வெண்ணீறு. தன்னை தரித்தவருக்கு மேன்மை தருவதால் விபூதி எனப்பட்டது.

85. ருத்ராட்ச மகிமை யாது?

ருத்ரனாகிய சிவபெருமானின் அட்சம் கண்களிலிருந்து தோன்றியதால் இப்பெயர் பெற்றது. நல்ல உத்திராட்சத்தை உரைத்துப் பார்த்தால் பசும் பொன்னின் மாற்று இருக்கு மென்று கூறுவர். ருத்ராட்சம் அணிபவரை தீமை மற்றும் பிணிகள் நெருங்காது.

86. சிவபெருமானின் அஷ்ட மூர்த்தங்கள் எவை?

நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய இந்த எட்டையும் அதிட்டித்து நிற்கும் சக்திகள் சிவபிரானின் வடிவங்களாகும்.

87. பாடல்பெற்ற சிவத்தலங்கள் எத்தனை?

அப்பர், சுந்தரர், ஞான சம்பந்தர் என்ற மூவரும் பாடிப் பரவிய தலங்கள் பாடல் பெற்ற தலங்கள் எனப்படும். அவை மொத்தம் 274. அதில் இம்மூவரும் பாடிய தலங்கள் 94.

88. சிவலிங்க வழிபாட்டின் தத்துவம் என்ன?

சிவலிங்கத்தை ருபாருபம் என்பர். உருவமற்ற அருவமான இறைவனை உருவகப்படுத்துவது லிங்கம். எங்கும் பரந்து நிறைந்த இறைவனின் அடையாளமாகக் கருதப்படுவது லிங்கம். அனைத்தும் எதில் லயமடைந்து பின் எதிலிருந்து வெளிப்படுகிறதோ அத்தகைய பரம் பொருள் என்று பொருள்படும். லிங்க உருவின் அடிப் பாகம் பிரமனையும், ஆவுடை எனப்படும் நடுப்பாகம் விஷ்ணுவையும், மேலே உள்ள நீள் வட்ட வடிவமான பாண லிங்கம் உருத்திரனையும் குறிக்கும்.

89. வைணவ மதத்தைப் பரப்ப இராமானுஜர் செய்தவை யாவை?

இராமானுஜர் 74 சிம்மாசனாதிபதிகள் என்ற ஆசாரியர்கள் மூலம் வைணவ மதத்தைப் பரப்பினார்.

90. எம்பெருமானார் தரிசனம் யாது?

இராமானுஜரே எம்பெருமானார் என்று அழைக்கப்படுவார். அவர் தமது உபதேசங்களாலும், நூல்களாலும் வைணவத்தைத் தழைக்கச் செய்தமையால் விசிஷ்டாத்வைத சித்தாந்தம் எம்பெருமானார் தரிசனம் எனப்படுகிறது.

91. வைணவ நெறிப்படி பஞ்ச சம்ஸ்காரங்கள் என்பவை யாவை?

தாபம், புண்ட்ரம், நாமம், மந்திரம், அர்ச்சனம் என்ற ஐந்தும் பஞ்ச சம்ஸ்காரம் எனப்படும்.

92. வைணவ நெறிப்படி ஐந்து முக்கிய தத்துவங்கள் யாவை?

1) ஸ்வரூபன் (அடைபவனாகிய ஜீவன்)

2) பரஸ்வரூபம் (அடையப்பட வேண்டியவன்)

3) புருஷார்த்த ஸ்வரூபம் (பயனாகிற முடிவிலா இன்பம்)

4) உபாயஸ்வரூபம் (உபாயமாகிற பக்தி)

5) விரோதிஸ்வரூபம் (இடையூறாக அமைகின்ற சாஸ்திர விரோதச் செயல்கள்)

93. வைணவர்கள் நெற்றியில் திருமண் இடுவதன் பொருள் என்ன?

வைணவர்கள் நெற்றியில் இடும் நாமம் ஒருவகைத் திருமண்ணால் இடப்படுவது. இறைவனது திருவடி அல்லாது உயிர்களுக்கு வேறு கதியில்லை என்பதை உணர்த்தத் திருமாலின் திருவடியின் சாயலாய்த் திருமால் அடியார்கள் இதனை இடுகின்றனர்.

94. மங்களா சாசனம் என்பது என்ன?

குறையேதும் இன்றி எல்லா மேன்மைக்கும் இருப்பிடமான இறைவனை பக்தன் ஒருவன் அன்பின் மிகுதியால் ஒரு தாய் குழந்தையை வாழ்த்துவது போல 'என் அன்பிற்குப் பாத்திரரான எம்பெருமானுக்கு ஒரு குறையும் உண்டாகலாகாது' என்று பிரார்த்தித்து வாழ்த்துவதே

'மங்களா சாசனம்' ஆகும். மங்களா சாசனம் பெற்ற திருத்தலங்கள் 108.

95. வைணவம் என்பதன் பொருள் என்ன?

திருமாலை மேலான தெய்வமாகக் கொண்ட சமயம் என்று பொருள்.

96. ஸ்ரீ மத்வர் ஸ்தாபித்த சம்பிரதாயம் எது?

த்வைதம்.

97. மத்வர் அவதரித்த தலம் எது?

உடுப்பி அருகிலுள்ள பாஜக சேத்திரம்தான் மத்வர் அவதரித்த தலம். (கி.பி. 1238).

98. ஜபம் செய்ய 108 மணிகள் கொண்ட மாலையைப் பயன்படுத்துவது ஏன்?

ஜபமாலையை அட்சமாலை என்பர். அட்சம் என்றால் எழுத்து. சம்ஸ்கிருத மொழியில் உயிர் மெய் எழுத்துக்கள். அவற்றின் இரு மடங்கு 108 ஆகும். எண்ணும் எழுத்து மாய், சொல்லும் பொருளுமாய், நாதமும் பிந்துவுமாய் விளங்குபவன் இறைவன். வைணவர் 74 சிம்மாசனாதிபதி களைக் குறிக்கும் 74 தாமரை மணிகளையும், 108 திவ்ய தேசங்களைக் குறிக்கும் 108 மணி கொண்ட துளசி மணி மாலையையும் உபயோகிப்பர்.

99. ஆதி சங்கரரின் சீடர்களில் முக்கியமான நால்வர் பெயர்களைக் கூறு?

பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், சுரேஷ்வரர்.

100. சங்கரரைப் பின்பற்றுகிற அத்வைதிகளின் குரு பரம்பரை யாது?

நாராயணன், நான்முகன், வசிஷ்டர், சக்திமுனிவர், பராசரர், வியாசர், சுகர், கௌட பாதர், கோவிந்த யோகீந்திரர், சங்கரர்.

101. 'அஷ்டாங்க யோகம்' அல்லது இராஜயோகத்தின் எட்டு உறுப்புகள் யாவை?

1) இமயம் 2) நியமம் 3) ஆசனம் 4) பிராணாயாமம் 5) பிரத்யாகாரம் 6) தாரணை 7) தியானம் 8) சமாதி.

102. ஆறு ஆதாரங்கள் யாவை?

மூலாதாரம், ஸ்வாதிஸ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்ற ஆறும் உடலில் முதுகெலும்பின் அடிப்பாகத்தில் ஆரம்பித்து புருவமத்தி வரை ஆறு இடங்களில் உள்ள யோக சக்கரங்கள் ஆகும்.

103. அஷ்டமா சித்திகள் எனப்படும் யோக சித்திகள் யாவை?

1) அணிமா - அணுவைப்போலத் தன்னைக் குறுக்கிக் கொள்ளும் ஆற்றல்.

2) மகிமா - மிகப் பெரிய உருவமாக மாறும் தன்மை.

3) கரிமா - மிகவும் கனமாதல்.

4) லகிமா - காற்றுப் போல் கனமற்று லேசாக மாறும் தன்மை.

5) பிராப்த்தி - விரும்பிய யாவும் பெறுதல்.

6) பிராகாம்யம் - நினைத்தவுடனே நினைத்தவற்றை அடையும் ஆற்றல்

7) ஈசித்வம் - எல்லாவற்றிற்கும் மேலான தன்மை.

8) வசித்வம் - அனைத்தையும் தன் வசமாக்கும் வசீகரத் தன்மை.

104. ஞான சாதனத்திலுள்ள நான்கு படிகள் யாவை?

கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல்.

105. வேதாந்த முறைப்படி நான்கு சாதன முறைகள் யாவை?

வேதாந்த விசார முறைப்படி 1) நித்யா நித்ய வஸ்து விவேகம் 2) வைராக்கியம் 3) ஸமாதி ஷட்கரண ஸம்பத்தி 4) முமு க்ஷுத்வம் என்ற நான்கு சாதனங்களைக் கொண்டு மேன்மையடைதல். இவை 'ஸாதன சதுஷ்டயம்' எனப்படும்.

106. இறைவனின் எண்குணங்கள் யாவை?

தன்வயமுடைமை, தூய உடம்புடைமை, இயற்கை அறிவுடைமை, முற்றறிவுடைமை, பாசங்களில் நீங்கி நிற்றல், பேரருள் உடைமை, முடிவில்லாத ஆற்றல்

உடைமை, வரம்பில் இன்பமுடைமை - இவை எட்டும் இறைமைக் குணங்களாம்.

107. இறைவனை அடையும் பொருட்டுப் பயில வேண்டிய நான்கு முக்தி மார்க்கங்கள் யாவை? இவற்றின் பயன்கள் யாவை?

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் கடவுளைப் பயில வேண்டிய மார்க்கங்களாகும். இவையே தாச மார்க்கம், சத்புத்ர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனப்படும். சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம் ஆகிய நான்கு வகைப் பேற்றினை அடையலாம்.

108. சுப்ரபாதம் பற்றி விவரி?

நல்லவற்றைப் பிரார்த்தனை செய்வது சுப்ரபாதமாகும். வைணவத்தில் சுப்ரபாதம் மூவரால் பாடப்பட்டது.

1) விசுவாமித்திரர் இராமருக்குப் பாடியது.

2) பெரியாழ்வார் கண்ணனுக்காகப் பாடியது.

3) தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கப் பெருமானுக்குப் பாடியது.

நாம் இப்போது பாடும் வெங்கடேஸ்வர சுப்ரபாதம் பிற்காலத்தில் மணவாள மாமுனியின் வேண்டுகோளுக்கு இணங்க, அவருடைய சீடர் பிரதிவாதி பயங்கரம் அண்ணமாச்சாரியாரால் பாடப்பெற்றது.

109. திருப்பதி திருமலை சந்நிதியில் கண்டாமணி ஒலிப்ப தில்லையே! ஏன்?

திருமலை சந்நிதியிலிருந்த கண்டாமணியே வேதாந்த தேசிகராக அவதரித்து விட்டதாகச் சொல்லப்படுவது மரபாதலின், சந்நிதியில் ஆராதனை சமயத்தில் கண்டாமணி ஒலிப்பது இல்லையாம்!

110. திருப்பதி (திருமலை) பெருமாளுக்கு உகந்த நைவேத்தியம் யாது?

பெருமாளுக்கு உகந்த நைவேத்தியம் புதுப்பானையில் சமைத்த தயிர் அன்னம்தான். விசேஷ நாட்களில் பொங்கலும் புளியோதரையும் தோசையும் நிவேதனம் செய்வார்கள். இப்போது வழங்கப்படும் லட்டு, வடை,

அப்பம் முதலியவை எல்லாம் 200 வருடங்களுக்குள் ஏற்பட்டவையே.

111. தோப்புக் கரணம் போடுவதால் ஏற்படும் அறிவியல் நன்மைகள் எவை?

விநாயகரின் சந்நிதியில் தோப்புக் கரணம் போடுவதும் நெற்றியில் குட்டிக் கொள்வதும் செய்து வழிபடுவதால் மூலாதாரத்தில் உள்ள குண்டலினி, தட்டி எழுப்பப்பட்டு அதனால் சுஷும்னா நாடி திறந்து கொள்கிறது. நெற்றியில் குட்டிக் கொள்வதால் அங்கே உள்ளடங்கியுள்ள அமிர்த கலசம் மேலெழும்பி, அதனால் அமிர்தம் உடல் முழுவதும் பரவுகிறது. இதனால் உடம்பில் சுறுசுறுப்பும், உள் எழுச்சியும் உண்டாகிறது. தியானிப்பதற்கேற்ப மன ஒருமைப்பாடும் இதனால் கிடைக்கிறது என்று சொல்லப்படுகிறது.

112. விநாயகரை வணங்கும் முறையை விவரி?

முதலில் வலக்கையால் முகத்துக்கு மேலாக இடப்பக்கத்திலும், இடக்கையால் வலப்பக்கத்திலும் தலையில் மூன்று முறை குட்டி, காதுகளைப் பிடித்துத் தோப்புக் கரணம் போட்டுக் கணபதியை வணங்க வேண்டும். உருண்டு திரண்ட நம் பாவங்கள் விநாயகர் அருளால் உடைந்து சிதறுவதாக நினைந்து தேங்காயை ஓங்கி அடித்துச் சிதற விட்டு நம் தீவினைகள் தொலைந்ததாக எண்ண வேண்டும்.

113. 'சங்கட ஹர சதுர்த்தி' பற்றி எழுதுக?

ஒவ்வொரு மாதத்திலும் பௌர்ணமி கழிந்த நான்காம் நாள் சங்கட ஹர சதுர்த்தி எனப்படும். இந்த நாளில் விநாயகரை வழிபட்டால் எல்லாச் சங்கடங்களும் நிவர்த்தி ஆகும். இந்நாளில் இரவு 9 மணிக்கு மேல் சந்திரனைப் பார்த்த பிறகே விநாயகர் வழிபாடு நடைபெறும். மாசி மாதம் வருவது மகா சங்கட ஹர சதுர்த்தி எனப்படும். அது செவ்வாய்க்கிழமையில் பொருந்தி வந்தால் மிகச் சிறப்பு.

114. விநாயகரைப் பிரதட்சிணம் செய்யும் விதிமுறைகள் யாவை?

இந்துக்கள் எவரும் பிரதட்சிணம் செய்யலாம். ஸ்நானம் செய்து மடியாக, ஆண்கள் விபூதி இட்டு, பெண்கள்

குங்குமம் இட்டு காலை எட்டு மணிக்குள் ஏழு பிரதட்சிண மாவது செய்ய வேண்டும். எள், வெல்லம் நிவேதனம் செய்ய வேண்டும். சனிக்கிழமைகளில் பிரதட்சிணம் செய்வது மிகவும் சிறப்பு. காலை எட்டு மணிக்குப் பிறகு அரச மரத்தடிக்குப் போகக் கூடாது.

115. விநாயகருக்கு விரத நாட்கள் எவை?

வெள்ளிக்கிழமை, விநாயக சதுர்த்தி, சங்கட ஹர சதுர்த்தி என்பன.

116. சூர சம்ஹாரத்தின் தத்துவம் யாது?

ஆணவம் நிறைந்தவன் சூரன். ஆணவம் முதிரும்போது உயிர் இறைவனை ஒரு போதும் காணாது. ஆணவத்தை ஒழித்தால்தான் அஃது இறைவனோடு ஒன்ற முடியும். ஆணவத்தைப் போக்க வல்ல இறைவன், உயிர்களின் மீது கொண்ட கருணையால் உயிர்களின் ஆணவமாகிய சூரனின் ஸ்தூல உடம்பைப் போக்கி ஆத்மாவைத் தன்னுடன் சேர்த்துக் கொள்கிறார் என்பதே சூரசம்ஹாரத்தின் கருத்தாகும்.

117. முருகனுக்கு வழிபாடு செய்யக் கூடிய முக்கிய நாட்கள் எவை?

சஷ்டி திதி; விசாகம், கிருத்திகை நட்சத்திரம், செவ்வாய்க் கிழமை, வெள்ளிக்கிழமை ஆகியவை.

118. வெள்ளிக்கிழமை விரதத்தின் சிறப்பு யாது?

வெள்ளிக்கிழமை விரதம் முருகனுக்கு மிகவும் சிறப்பானது. இந்த விரதத்தால் நினைத்த பயன் கை கூடும். இதன் சிறப்பை,

*'வெள்ளிநாள் விரதந்தானே விண்ணவர் உலகைக் காத்த*
*வள்ளல்தன் விரதமாகும், மற்றதுபுரிந்த மேலோர்*
*உள்ளம்மேல் நினைந்தவெல்லாம் ஒல்லையின் முடியுமன்றே'*

என்று கந்த புராணம் கூறுகிறது.

119. சஹஸ்ர சண்டி ஹோமத்தினால் விளையும் நன்மைகள் யாவை?

மக்களுக்கு உண்டாகும் கிரக பீடைகள், இயற்கைச் சீற்றங்கள், வெள்ளம் முதலியவற்றால் ஏற்படும் சேதங்கள், பகைமை, சத்துருக்கள் பயம், ஆயுதங்களால் உண்டாகும் அழிவுகள், கொடிய தீமைகள் யாவும் விலகும். மங்கலமும் நோயற்ற வாழ்வும் கிட்டும்.

120. ஆடி மாதத்திய, தை மாதத்திய வெள்ளிக்கிழமைகள் அம்பாளுக்கு சிறப்புடையதாகக் கூறப்படுவது ஏன்?

தட்சிணாயனம், உத்தராயனம் என்ற இவ்விரு அயனங்களுமே புண்ணிய காலங்கள் என்று கொள்ளப் படுகின்றன.

தட்சிணாயனத்தின் ஆரம்பம் ஆடி மாதம்.

உத்தராயனத்தின் ஆரம்பம் தை மாதம்.

அயன ஆரம்ப காலமாகவுள்ள இவ்விரு மாதங்களும் சிறப்புடையவை. பொதுவாக வெள்ளிக்கிழமை அம்பாளுக்குரிய சிறந்த நாள். இதனோடு அயனத்தின் ஆரம்பம் என்னும் சிறப்பும் சேருவதால் இவ்விரு மாதங்களிலும் வரும் வெள்ளிக்கிழமைகள் அம்பாளுக்கு மிகவும் விசேஷமுடையனவாகக் கருதப்படுகின்றன.

இம்முறை பற்றியே இவ்விரு மாதங்களிலும் வரும் அமாவாசை, கிருத்திகை நாட்களும் மிகவும் சிறப்பாகக் கொள்ளப்படுகின்றன. (தை அமாவாசை, தைக் கிருத்திகை, ஆடி அமாவாசை, ஆடிக் கிருத்திகை).

121. அம்பாளுக்குரிய விரத நாட்கள் எவை?

வெள்ளிக்கிழமை விரதம், நவராத்திரி விரதம் என்பன.

122. வைணவ ஆலயங்களில் செய்யப்படும் ஷோடச உபசாரங்கள் 16 யாவை?

1. கை அலம்ப நீர் அளித்தல்

2. திருவடி அலம்ப நீர் அளித்தல்
3. மும்முறை மந்திர நீர் அருந்த அளித்தல்
4. ஆசனம் அளித்தல்
5. நீராட்டம்
6. பரிவட்டம் சமர்ப்பித்தல்
7. நறுமணப் பொருள் இடுதல்
8. மலர் சூட்டுதல்
9. நறுமணப் புகை வாடை சமர்ப்பித்தல்
10. திருவிளக்கு ஆட்டுதல்
11. தளிகை கண்டருளப் பண்ணுதல்
12. கற்பூர ஆரத்தி எடுத்தல்
13. கவரி வீசுதல்
14. விசிறி வீசுதல்
15. மரியாதை குடை சமர்ப்பித்தல்
16. தட்டொளி (கண்ணாடி) காட்டுதல் என்பன.

123. வைணவத்தில் கூறப்படும் பஞ்ச சம்ஸ்காரங்கள் யாவை?

1) அடையாளம் (சங்கு, சக்கரம் தரித்துக் கொள்வது)
2) திருமணக் காப்பைத் தரித்துக் கொள்வது
3) ஆண்டவன் திருநாமத்தைச் சொல்வது
4) மந்திரங்களை அனுசந்திப்பது
5) ஆராதனம் செய்வது முதலியன.

124. திருமண் காப்பின் சிறப்பு யாது?

திருநாராயணபுரத்தில் கிடைக்கும் ஒருவகை வெள்ளை மண்ணில் செய்யப்படுவதே நாமக் கட்டியாம். இதனை இட்டுக் கொள்வதே திருமண் காப்பு ஆகும்.

பரமனின் பாதார விந்தமே உயிர்க்குக் கதி என்பதை உணர்த்தும் பொருட்டு திருவடி போன்று இடப்படுகிறது.

மத்தியில் இடப்படும் செந்தூரம் இலக்குமியின் அம்சம். சம்ஸ்கிருத வேத சாத்திரங்களுக்குப் பிரதானம் கொடுக்கும் வடகலையாளர் பாதம் வைக்காமல் இடுவர். ஆழ்வார் களின் பாசுரங்களுக்கு ஏற்றம் கொடுக்கும் தென்கலை யாளர் திருமண் காப்பின் கீழ் பாதம் வைத்து இடுவர்.

125. நவ திருப்பதிகள் எவை?

1. திருவைகுண்டம் 2. ஆழ்வார் திருநகரி
3. தென் திருப்பேரை 4. தொலைவில்லி மங்கலம்
5. திருக்குளந்தை 6. புளியங்குடி
7. திருக்கோளூர் 8. வரகுண மங்கை

9. தொலை வில்லி மங்கலத்தில் உள்ள அரவிந்த லோசனன் சந்நிதி ஒரு தனித் திருப்பதியாகக் கொள்ளப்படுகிறது.

இவை அனைத்துமே நெல்லை மாவட்டத்தில் உள்ளன.

❑ ❑ ❑



அநுராகம் சிறப்பு வெளியீடுகள்

## ஆன்மீகம்

| | |
|---|---|
| இந்துமதச் சிந்தனைகள் பாகம் - 1 | 10.00 |
| இந்துமதச் சிந்தனைகள் பாகம் - II | 10.00 |
| இந்துமதச் சிந்தனைகள் பாகம் - III | 10.00 |
| இந்துமதச் சிந்தனைகள் பாகம் - IV | 10.00 |
| இந்துமதச் சிந்தனைகள் பாகம் - V | 10.00 |
| ஆன்மிகச் சுடர் | 10.00 |
| கீதையின் செய்தி | 10.00 |
| யக்ஷனின் கேள்விகளும் தர்மரின் பதில்களும் | 10.00 |
| பகவான் ஸ்ரீ சத்ய சாயிபாபா அருளிய மணிமொழிகள் | 10.00 |
| அற்புதங்களும் அதிசயங்களும்: ஷிர்டி சாயிபாபா | 10.00 |
| தெய்வீகச் சிந்தனைகள் | 10.00 |
| இந்துமதப் பண்டிகைகளும் விரதங்களும் | 10.00 |
| இந்துமத நோக்கில் இறை தத்துவம் | 10.00 |
| ஆலய வழிபாடும் இறைவன் அருளும் | 10.00 |
| ஸ்ரீ சுதர்ஸன வழிபாடும் இறைவன் அருளும் | 10.00 |
| ஸ்ரீ சத்ய நாராயண பூஜை | 10.00 |
| ஸ்ரீ சந்தோஷி மாதா | 10.00 |
| திரிவேணி சங்கமம் | 10.00 |
| நிகரற்ற இந்துமதத்தின் 100 மகிமைகள் | 10.00 |
| வாழ்வின் இறுதியும் மறுவாழ்வும் | 10.00 |
| நலமுடன் வாழ நற்கருமங்கள் | 10.00 |
| கண்ணனும் கண்ணதாசனும் | 10.00 |
| அர்ஜுனன் | 10.00 |
| தருமர் | 10.00 |

